உ

சிவமயம்.

# இடும்பன்கவசம்.



இவை

அஷ்டாவதானம் - பூவை

கல்லியாணசுந்தரமுதலியாரவர்கள்

இயற்றிய,

## கடம்பன் கவசம்,

அகத்தியப்பஞ்சகம்.



சென்னை-சூளை

நிரஞ்சனிவிலாச அச்சுயந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.



1892.௵

கணபதி துணை.

# இடும்பன்கவசம்.



காப்பு.

இடும்ப விடும்பைக ளீடழிக்க வந்த
இடம்பன் கவசமிது.

ஓம் அகஸ்தியர் சீஷா
அறுமுகன் தூதா
அடியேன் வல்வினை
யகற்றிட வருவாய்
செகத்தினி லெங்கும்
சிறந்து நின்றவனே
தகதக தகவென
சாரிநீ வருவாய்
அண்டமும் பிண்டமும்
அதிரவே வருவாய்

மண்டலம் புகழ
வருவாய் கடம்பா
தண்டா யுதமுந்
தனிநீற்று நெற்றியும்
வண்டார் கடம்பா
வரவே சமயம்
கண்டமு மார்புங்
காமிடை யழகும்
அண்டர்கள் போற்று
மாயுத வழகும்
எண்டிசை யதிரவே
யேறிய மிதியடி
தண்டையுங் கொலுசுஞ்
சாமுட னழகும்
அண்டர்கள் போற்றிய
வாயுத வழகும்
தண்டா யுதத்தொடு
தாண்டிநீ வருவாய்

வருவாய் வருவாய்
வல்லிடும் பேசா
வருவாய் பழனி
மலைக்குக் காவலா
இவ்வும் சவ்வும்
ஈசனே அரனே
வவ்வும் மவ்வும்
ஆகிய பரனே
சவ்வும் கிலியும்
ஐயுமா னவனே
வவ்வும் உவ்வு
மாய்வளர் துரையே
அவ்வும் உவ்வு
மாகிய கோவே
குறத்தி மகனே
குறவன் குமரா
மறத்தி மகனே
வல்லிடும் பேசா

ஆறுமா முகத்தெம்
மண்ணல்தன் றனையே
வீறுடைத் தேவர்
வேண்டும் பொருளே
இருப்புத் தடியு
மிருகைவல் லயமும்
சுருட்டு வாளுந்
தொங்கு சங்கிலியும்
எடுத்து வரவே
இதுவே சமயம்
ராரா ராரா
வென்னுயக விடும்பா
ராரா ராரா
நமனு நடுங்க
றீரா றீரா
றீங்கார சொரூபா
வாரய் வாராய்
வல்லிடும் பேசா

வள்ளி யம்மைதன்
மைந்தனே ராரா
துள்ளிய நடையுந்
துண்டுத் தடியொடு
முள்ளு மிதியடி
முனைமேல் நின்று
சமயந் துரையே
சடுதியில் வருவாய்
சமய மிதுவே
தமியனை ரக்ஷியும்
உபய தாண்மல
ருண்மையாய் நம்பினேன்
அபய மாசே
அடியனைக் காக்க
ஓங்கா ரத்துடன்
ஒலிக்கும் றீங்காரா
ஆங்காரத்துட
னார்ப்பரித் தெழுந்து

ஜல்லடங் கட்டியே
சாமிநீ வருவாய்
பில்லி சூனியம்
பெலத்த ஏவல்கள்
துள்ளிய சடாமுனி
சோதிபா வாடையும்
பள்ளக் கருப்பன்
சாமுண்டி சாத்தன்
பள்ள வீரன்
பத்திர காளியும்
மசானக் கரையில்
வாழ்ந்திடும் பிசாசம்
பிசாசினுக் கெல்லாம்
பெருந்தலை முனியும்
கருத்த இருளன்
காட்டேரி யக்ஷணி
உருத்துப் பார்க்கும்
உக்கிர முனிகளும்

கொள்ளிய தேளுங்
கொடுவிஷப் பாம்பும்
பலவிட மெல்லாம்
பரிந்திட வெரித்து
பட்டு பட்டு
பரந்திட எரி எரி
வெட்டு வெட்டு
வேளைக் களைந்திடு
முட்டு முட்டு
முடுகியே முட்டு
கொட்டு கொட்டு
கூறிடக் கொட்டு
கட்டு கட்டு
கடுகவே கட்டு
கட்டு கட்டென்
மாற்றானைக் கட்டு
குத்து குத்தென்
கூர்வேன் முனையால்

பற்று பற்று
பறந்திட் டோட
கண்முழி பிதுங்கிக்
கலங்கிட எரி எரி
விண்ணோர் புகழும்
வேலவர் தூதா
எரிஎரி எரிஎரி
ரெணக்களம் போல
பரிபரி பரிபரி
பாசக் கயிற்றால்
முறிமுறி முறிமுறி
மூன்று துண் டாக்கிடு
படுபடு படுபடு
பல்லைப் பிடுங்கிடு
அடிஅடி பிடிபிடி
இடிஇடி சுடுசுடு
பார்த்திடும் பேர்களைப்
பார்வை யறுத்திடு

சத்துரு நாசனந்
தணலெரி மூட்டி
புத்திர னழைக்க
புனிதநீ வருவாய்
எங்கிருந்தாலு
மென்னெதிர் வருவாய்
எங்கிருந்தாலு
மென்னெதிரியை யடக்குவாய்
சங்கிலி பூட்டிச்
சதைத்திடு எதிரியை
துங்கமா மயிலோன்
றூதா வாவா
ஐயா இடும்பா
அறுமுகத் தூதா
வையா புரியில்
வளர்ந்துநின் றவனே
வடிவேல் வாசா
மந்திரி வருவாய்

அடியே னழைக்க
அன்புடன் வாவா
நற்ருய் போல
நயந்துநீ வருவாய்
வருவீ ரீசா
வல்லிடும் பேசா
மேலே மலைக்கு
விண்ணிடும் பேசா
சோலை மலைக்குத்
தோன்றிடும் வாசா
பழனியில் வாசா
பங்கய நேசா
அரகரா வென்றவுன்
அடியனை ரட்சி
கடம்பா வென்றிட
காத்துநீ ரக்ஷி
இடும்பா வென்றே
னென்றன்முன் வருவாய்
குற்ற மிருப்பினுங்
கோபங் கொள்ளாய்

அடங்கா சத்துருவை
  அக்கினி மூட்டிடும்
அடங்காத பேயை
  அடைத்துவா யடைத்திடும்
இணங்காத பேயை
  யெடுத்து மறித்திடும்
வணங்காத பேயை
  வாளா லறுத்திடும்
ஆங்கார சொரூபா
  யடியடி பிடிபிடி
இடுஇடு சுடுசுடு
  இதுவே சமயம்
இதுவே சமைய
  மென்றன்முன் வருவாய்
கடம்பா சரணம்
  கதிர்வேலா சரணம்
இடும்பா சரணம்
  ஈசா சரணம்

ஷண்முகத் தூதா
சரணம் சரணம்
சரணம் சரணம்
தற்காத் தருளே.

## இடும்பன்கவசம்

முற்றிற்று.





உ

கணபதி துணை.

# கடம்பன் கவசம்.

காப்பு.

கல்விகுணஞானங் கருணைபொறை யீகைம
செல்வியருளெல்லாஞ் சிறக்கவே-நல்ல[வர்ச்
கடம்பொழியுமும்மதத்தக் காரானைவாழ்த்தி
கடம்பவன்கவசங் கழறு.

முருக முருக
முருக முருக
சரவண பவசிவ
சண்முக முருக
செந்தி நகரிற்
செறிந்திடு முருக
திருப்பரங் குன்றிற்
றிகழு முருக
பழனி மாமலை
பதிந்த முருக

ஏரக மதினி
வியங்கு முருக
பழமுதிர்ச் சோலையிற்
பயிலு முருக
குன்றக் குடியிற்
குலாவிய முருக
திருவுரு மாமலை
சிறந்த முருக
திருமலை யதனிற்
றேறு முருக
வள்ளியூ ரதனில்
வழங்கு முருக
கழுகு மலையிற்
கனிந்த முருக
வாச கிரியில்
வதிந்த முருக
விலஞ்சி யூரினில்
மிளிரு முருக

வேள்வி மாமலை
வேட்ட முருக
அடிப்பா டதனி
லமர்ந்த முருக
சிவகிரி யதனிற்
செய்ய முருக
மேட்டுக் குடியினில்
மேன்படு முருக
எண்க னூரினி
லெழுந்த முருக
விராலி மலையினில்
விளங்கு முருக
மயிலா சலத்தினில்
மகிழ்ந்த முருக
தணிகை யதனில்
சார்ந்திடு முருக
போரூ ரதனிற்
பொருந்திய முருக

வேங்கட மதனில்
விராவு முருக
சத்தி மலையிற்
றங்கிய முருக
நட்சத்திர மலை
நண்ணிய முருக
அருணு சலமதி
லழகிய முருக
சோமா சினியிற்
றேன்றிடு முருக
அவலூர் தன்னி
லார்ந்த முருக
சித்தர் மாமலை
சிறக்கு முருக
வேலுடை பட்டினம்
விரும்பு முருக
பேறை நகரிற்
பிறங்கிடு முருக

பூண்டி யதனில்
பொலிந்த முருக
உடும்பை யதனை
யுகந்த முருக
கதிர்கா மத்தினிற்
கலந்த முருக
பலமலை யதனிற்
பயிலு முருக
அடியார் மனதி
லாண்ட முருக
ஏகாட் சரமா
யேய்ந்த முருக
பஞ்சாட் சரமாய்ப்
பதிந்த முருக
சடாட்சர மாக
சமைந்த முருக
அஷ்டாட் சரமா
யமைந்த முருக

பதார்த்த மூன்றெனப்
பகுத்த முருக
பதிநீ யலவெனப்
பகர்ந்த முருக
பசுவின் செயலைப்
பணித்த முருக
பாச மொழிக்கப்
பயன்சொலு முருக
ஆணவ வினையை
யகற்றிடு முருக
காமியச் செயலைக்
கலக்கிடு முருக
மாயையின் றொழிலை
மறித்திடு முருக
ஓம்ஓம் ஓம்ஓம்
ஓங்கார முருக
றீங்றீங் றீங்றீங்
றீங்கார முருக
ஐயுங் கிலியு
மாகிய முருக

ஔவும் சவ்வு
மான முருக
சசசச சரஹண
பவவோம் முருக
ரரரர ரஹணபவ
வசவோம் முருக
ஹஹஹஹ ஹணபவ
சரவோம் முருக
ணணணண ணபவச
ரஹவோம் முருக
பபபப பவசர
ஹணவோம் முருக
வவவவ வசரஹ
ணபவோம் முருக
பில்லி சூனியத்தைப்
பிரித்திடு முருக
குட்டி மோகினியைக்
குலைத்திடு முருக
காளி வோங்காளியைக்
கழித்திடு முருக

கறுப்பன் வீரப்பனைக்
கடிந்த முருக
இடாகினி தன்னை
யெறித்திடு முருக
துஷ்ட தேவதைகளைத்
தொலைத்திடு முருக
தலைவலி கண்ணோய்த்
தவிர்த்திடு முருக
குன்ம நோயதனைக்
கோறிய முருக
பீனிச வலியைப்
பெயர்த்திடு முருக
வாத பித்தத்தை
வதைத்த முருக
சன்னி காமாலையைச்
சதைத்த முருக
மூல ரோகத்தை
முறித்த முருக
பவுத்திர சோகையைப்
பதைத்திடு முருக

சூலக் கிரந்தியைச்
சுழற்றிடு முருக
சிவய நமவென
சிவன்றரு முருக
வயந மசியெனும்
வரனருள் முக
யநம சிவவெனும்
யதிதரு முருரு
நமசி வயவெனும்
நலன்றரு முருக
மசிவ யநவெனும்
மறைதரு முருக
அரஅர அரஅர
அரஅர முருக
அரிஅரி அரிஅரி
அரிஅரி முருக
ஆறு முகங்க
ளான முருக
அயிலுஞ் சேவலு
மணிந்த முருக

வெண்டிரு நீறு
விளங்கிடு முருக
தையலார் வலையைத்
தடுத்தாள் முருக
நாடக மயின்மிசை
நடமிடு முருக
மான்மகள் கோன்மகள்
மணந்த முருக
முதற் குருவாகி
முளைத்த முருக
புண்ணிய வடிவாய்ப்
பொலிந்த முருக
தாயினு மினிய
சாமியா முருக
என்பொரு ளாவியை
யேற்ற முருக
வேதாக மங்கள்
விளம்பிய முருக
ஊரும் பேரு
மொழிந்த முருக

பல்லுல கதனிற்
பதிந்த முருக
நோக்கா லென்னை
நோக்கின முருக
சோதி ரூபமாய்த்
தோன்றிய முருக
பூதி சாதனம்
புரிந்த முருக
சும்மா யிருவெனச்
சொல்லிய முருக
கந்த முருக
கடம்ப முருக
காக்க முருக
காக்க முருக
வாழ்க முருக
வாழ்க முருக
முருக முருக
முருக முருகனே

கடம்பன்கவசம்-முற்றிற்று.



சிவமயம்.

# அகத்தியப் பஞ்சகம்.



குகனே வருக களங்க மிலாக்
கோனே வருக கறைமிடற்றோன்
மகனே வருக மனம்பூத்த
மலரோ வருக வோராறு
முகனே வருக சிவானந்த
முதலே வருக வடியாரின்
அகனே வருக பழனிமலை
யரசே வருக வருகவே.

கந்தா சரண மயில்வேற்செங்
கரனே சரணங் காமாரி
மைந்தா சரணஞ் செந்திருமான்
மருகா சரணம் வறியேன்றன்
சிந்தா குலந்தீர்த் தருள்செய்யுஞ்
சேயே சரண மெனக்காக்கும்
எந்தாய் சரணம் பழனிமலை
யிறைவா ஞ்சரண சரணமே.

சிவமே போற்றி சிற்சபையோன்
செல்வா போற்றி கௌமாரர்
தவமே போற்றி விண்ணுலகத்
தலைவா போற்றி யென்போல்வார்
பவமே யொழிக்க வந்தருளும்
பதியே போற்றி யந்நாளில்
அவமே பொடித்த பழனிமலை
யண்ணா போற்றி போற்றியே. ௩

நாதா தருக நலமெல்லா
நண்பே தருக வுனைவேண்ட்
போதா தருக மெய்ஞ்ஞானம்
புனிதா தருக கருணைபொறை
தாதா தருக கல்விகுணம்
தயையே தருக கேட்டவெலாம்
ஈதா வெனுமுன் பழனிமலை
யிறைவா தருக தருகவே. ௪

கூர்வேல் வாழி தேவர்தொழுங்
குமரன் வாழி நடனமயில்

சீர்மன் வாழி வலனுயர்த்த
சேவல் வாழி வள்ளிதெய்வப்
பேர்மான் வாழி பேசரிய
பெரியோர் வாழி செஞ்சாலி
ஆர்வண் பண்ணைப் பழனிமலை
யப்பன் வாழி வாழியவே. ரு

அகத்தியப்பஞ்சகம்

முற்றிற்று.



